**[Mr. Chairman] [1st November 1962**

I would suggest. Apart from money, sending them cigarettes, sweets and articles of clothing will be very greatly appreciated when they are fighting in the No-Man's land where nothing is available. A few boys came to see me this afternoon and they said that they had collected some money, bought some cigarettes and had already despatched them to the proper quarters. All these things we can do.

I am so happy and I am almost conceited to feel that we have in this House 63 Members who are prepared to sacrifice for the sake of the country and to see that the country wins the battle or the battles that are ahead. We should be in a position and I am sure we will be in a position, apart from the early reverses, to gain victory at the end, and dictate terms in Peking to Chou En-lai.

I now declare this Resolution unanimously passed. (Cheers.)

## V—NON-OFFICIAL RESOLUTION.

### ELEMENTARY AND SECONDARY EDUCATION—*cont.*

**டாக்டர் அ. சிதம்பரநாதன் :** தலைவர் அவர்களே, நான் முதலில் இந்தத் தீர்மானத்தைப் படிக்கலாம் என்று கருதுகிறேன்.

'This Council recommends to the Government that a Committee be constituted to review the whole position of Elementary and Secondary Education in the State and to suggest measures necessary to make available facilities for Elementary and Secondary Education particularly in the rural areas so that a definite plan may be evolved which will not be subjected to frequent changes.'

இந்தத் தீர்மானத்தினுடைய கருத்து, இதுகாறும் நம்முடைய மாநிலத்திலே தொடக்க நிலைக்கல்வி, உயர்நிலைக்கல்வி இவற்றின் நிலைபற்றி ஒரு மதிப்பீடு செய்யப்படவேண்டும் என்பது. **"review"** என்று தீர்மானத்தில் இருப்பது 'புனர் ஆலோசனை' என்று மொழி பெயர்ப்பில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தமாதிரி என் கருத்து இல்லை. **A critical examination of the position is what is wanted.** புனராலோசனை செய்யவேண்டும் என்பது என்னுடைய நோக்கம் அன்று. இப்பொழுது கிடைக்கக்கூடிய வசதிகளை எல்லாம் நாட்டு மக்களுக்கு, நாட்டுப்புற மக்களுக்கு, கிராம மக்களுக்கு அதிகமான அளவுக்குப் பயன்பட வேண்டிய முறையில் செயலாற்ற வேண்டும் என்பது நோக்கம். இதற்காக ஆலோசனை கூறுவதற்காக கல்வி நிபுணர்கள் அடங்கிய குழு ஒன்று அமைக்க வேண்டும் என்பது தீர்மானத்தின் நோக்கம். அதேமாதிரி அந்தக் குழு ஆலோசனை சொல்லுகிறபோது நல்ல தெளிவான, பலமான, உறுதியான திட்டம் தருமேயானால், அடிக்கடி மாற்றப்படாத திட்டம் தருமே யானால் நல்லதாக இருக்கும் என்று கருத்தில் அந்தக் குழு அமைக்கப்படவேண்டும் என்று நான் இந்தத் தீர்மானத்தில் சொல்லியிருக்கிறேன். நம்முடைய மாநிலத்தில் தொடக்க நிலைக்

1st November 1962] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

கல்வி பெருவாரியாக கொடுக்கப்பட்டு வருகிறது என்பது தெளிவு. நம்முடைய மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட முடிவுக்குள் பள்ளிக் கூடம் போகும் வயது உடைய குழந்தைகள் பெரும்பான்மையான வர்கள் பள்ளிக்கூடத்திற்கு வந்து சேரும் வகையில் திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது என்பது உண்மை. அந்தப் பரவலான வகையில் இந்தக் கல்வி தொடக்க நிலையில் கொடுக்கப்படுகிறதே, அது ஆழ்ந்த வகையில், நல்ல அழுத்தமான வகையில் கொடுக்கப் படுகிறதா என்பதைப்பற்றிச் சீர்தூக்கி ஆராயவேண்டும், ஆராய்ந்து இந்தக் குழு சொல்லவேண்டும் என்பது என் கருத்து. நாம் நம்முடைய மாநிலத்தின் மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தை வெளிபடுத்தியிருக்கிறோம். நேற்று எங்கள் கையில் கொடுக்கப்பட்ட அந்த ஐந்தாண்டுத் திட்ட அறிக்கையில் 142-வது பக்கத்திலே 16-வது பாராவில் முதல் நிலைக்கல்விக்கு அதிகமான மாணவர்களைச் சேர்க்க வேண்டும் என்பது எதிர்பார்க்கப்பட்டிருக் கிறது. ஆனல் உயர்நிலைக்கல்வியைப் பொறுத்த வரையில் தரத்தைச் சீர் செய்வது என்று எதிர்பார்க்கப்பட்டிருக்கிறது. இது தான் இங்கிலீஷ் வாக்கியம். "While the emphasis in Primary Education has been on increasing enrolment on a large scale.

(Deputy Chairman in the Chair.)

the emphasis in Secondary Education Schemes has been on improving the quality and content of Education."

எனவே அரசாங்கம் திட்டம் வரையறை செய்து இருக்கிறபோது, தொடக்க நிலைக்கல்வியைப் பரவலாகச் செய்ய வேண்டும் என்பதற் காகவும் ஆட்கள் எத்தனைபேர் பள்ளிக்கூடத்தில் கொண்டு வந்து சேர்க்கிறார்கள் என்ற கணக்கு எடுக்கச் செய்வதற்காகவும் உயர் தரக்கல்வியை அழுத்தமாக, தரம் மிக்கதாகச் செய்யவேண்டும் என்பதற்காகவும் திட்டம் வகுத்திருப்பதாகத் தெரிகிறது. இது சிந் திக்க வேண்டியது. உயர்நிலைக் கல்வி மாத்திரம் தரமாக இருந்தால் போதுமா என்பதைக் கேட்கிறேன். அதேபோல் அடிப்படைக் கல்வியாக இருக்கிற கல்வி தொடக்க நிலைக் கல்வித் தரம் உடைய தாக இருக்க வேண்டாமா? அந்த அஸ்திவாரம் தரம் உடைய தாக இருந்தால் தானே மேலே எழுப்பப்படுகிற கல்விக் கட்டிடம் ஒழுங்காக அமையும்? ஆகையினல் இம்மாதிரியான நோக்கம் சரி தானு என்று அந்தக் குழு ஆராய்ந்து சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். "Emphasis in both Primary Education and Secondary Education should be on improving the quality and content of education."

ஒன்றிலே மாத்திரம் தரம் அதிகமாக இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதும் இன்னென்றில் பெருவாரியாக எண்ணிக் கையைப் பெருக்கவேண்டும் என்று சொல்வதும், அதை எதிர் பார்த்து இருப்பதும் பொருந்தாது என்பது என்னுடைய அழுத்த மான நம்பிக்கை. ஆகையினல் இந்தக் குழு அதைப்பற்றிச் சிந்திக்க வேண்டும். அதற்காக இந்தக் குழு அமைக்கப்பட வேண்டும் என்று நான் குறிப்பிட விரும்புகிறேன்.

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [1st November 1962

4-30 p.m. கனம் கல்வி அமைச்சர் அவர்கள் 'நாங்கள் குழுக்கள் அடிக்கடி அமைத்து இருக்கிறோமே, இப்போதுகூட கமிட்டி இருக்கிறதே கன்சல்டேட்டிவ் கமிட்டி ஆன் எஜுகேஷன் என்றெல்லாம் இருக்கிறதே' என்று சொல்வார்கள். முன்னாள் கல்வி அமைச்சராக இருந்தவர் 'அட்வைசரி கமிட்டி ஆன் எஜுகேஷன்' என்று அமைத்திருந்தார்கள். அதை இப்போது கன்சல்டேட்டிவ் கமிட்டி ஆன் எஜுகேஷன் என்று ஓரளவு மாற்றி இப்போது உள்ள கல்வி அமைச்சர் அவர்கள் அமைத்திருக்கிறார்கள். இது இரண்டும் ஒரே வித அமைப்பா? எங்களிடத்தில் ஆலோசனை கேட்கிறபோது மாத்திரம் சொல்வது கன்சல்டேடின் கமிட்டியில் என்றும் தானாகவே ஆலோசனை சொல்லக்கூடியதாக அட்வைசரி கமிட்டி இருக்கிறதென்றும் நினைத்தேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** இரண்டும் ஒன்றுதான்.

**டாக்டர் அ. சிதம்பரநாதன்:** இரண்டும் ஒன்றுதான் என்றால் திருப்தி. அதில் எல்லாக் கட்சிக்காரர்களும் இருக்கிறார்கள். அசெம்பிளி, கவுன்சில் கட்சித் தலைவர்கள், உறுப்பினர்கள் இருக்கிறார்கள். நான் குறிப்பிடுகிற குழு, கல்வி நிபுணர்கள் அடங்கிய குழுவாக இருக்க வேண்டுமென்பது. அவர்களிடத்தில் இதை ஒப்படைத்து "நீங்கள் இருபது ஆண்டுகளாக நடைபெற்றிருப்பதைச் சாவதானமாக சிந்தித்துப் பாருங்கள். இந்த மார்ச் மாதத்திற்குள் அறிக்கை கொடுக்கவேண்டுமென்ற கட்டாயம் இல்லை. அழுத்தம் திருத்தமாக ஆலோசனை கூறுங்கள். அடிக்கடி மாற்ற முடியாத நிலைமையில் ஆலோசனை தாருங்கள்" என்று கேட்க வேண்டியதுதான் இதன் நோக்கம். துணைத்தலைவர் அவர்களுக்கு நினைவிருக்கும், ஸ்டேட் எஜுகேஷனல் சர்வே ஆபீசர் என்று ஒருவர் 1956-ல் நியமிக்கப் பட்டார். அவர் அறிக்கை ஒன்று முன்னரே கொடுத்திருக்கிறார். ஸ்டேட் எஜுகேஷனல் சர்வே என்பதாக இந்தப் புத்தகம்; 1957-ல் வெளியிடப்பட்டிருக்கிறது. அதில் பார்த்தால் மூன்று விதமான பள்ளிக்கூடங்கள் நடைபெறவேண்டுமென நாடுமுழுவதும் எதிர்பார்க்கப்பட்டிருக்கின்றன. "ஒன்று ஹேபிட்டேஷன் பள்ளி" என்பது. ஹேபிட்டேஷன் என்றால் வாசஸ்தலம் என்பதில்லை. குடியிருப்பு என்று மொழிபெயர்ப்பில் கூறலாம். க்ளஸ்டர் ஆஃப் ஹவுஸஸ் (Cluster of Houses) என்று கூறப்பட்டிருக்கிறது. ரெவின்யூ கிராமத்திற்கு ஒரு பள்ளிக்கூடம் வைத்தால் வயலாக இருக்கிற இடமாக இருந்தாலும் இருக்கும் ரெவின்யூ கிராமத்தில் நான்கு, பத்து குடிசைகள் இருக்கலாம் என்று இருப்பதைவிடக் குடியிருப்பவர்கள் நிரம்பிய இடமென்று குறிப்பிட்டு அதில் கட்டாயம் ஒரு மைல் தூரத்தில் குழந்தைகள் போகும்படியாகப் பள்ளி அமைக்கவேண்டும் என்பது எதிர்பார்க்கப்பட்டது. ஐந்து வயது முதல் 11 வயது வரையில் உள்ள குழந்தைகள் ஒரு மைலுக்கு மேலே நடந்துபோகக்கூடிய நிலைமையில் இருக்கக் கூடாது என்பது சிபாரிசு. இடைத்தரப் பள்ளிகூடம், குழந்தைகள் மூன்று மைலுக்கு மேல் நடந்து போகாமல் இருக்கும்படியான வசதியோடு செய்து தர வேண்டுமென்பது கருத்து. உயர்

1st November 1962] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

நிலைப் பள்ளிக்கூடத்திற்குப் போக முற்படுகிற மாணவர்களுக்கு ஐந்து மைலுக்கு மேல் நடக்கும்படியாக இருக்கக்கூடாது. அதற்குமேல் நடந்து பயணம் செய்ய நேராத நிலைமையில் இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. இவையெல்லாம் 1957-ல் ஸ்டேட் எஜுகேஷனல் சர்வே ரிப்போர்ட்டில் இருக்கின்றன. இவையெல்லாம் நிறைவேறி இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும். Group School, Independent School, Peripatetic teacher School என்று மூன்று விதமான பள்ளிக்கூடங்கள் இருக்க வேண்டுமென எதிர்பார்க்கப்பட்டது. ஹேபிட்டேஷன் என்று சொல்லக்கூடிய குடியிருப்புப் பள்ளிக்கூடம்—சுயேச்சையான பள்ளிக்கூடம் அல்லது தனி உரிமைப்பள்ளிக்கூடம் என்று இரண்டுவகை கூறியிருக்கிறது. இரண்டு மூன்று ஹேபிட்டேஷன் பகுதிகளுக்குச் சேர்ந்து ஒரு பள்ளிக்கூடம் இருக்கலாம். அதைக் குரூப் ஸ்கூல்ஸ் என்று சொல்லியிருக்கிறது. பள்ளிக்கூட மாணவர்கள் ஒரு இடத்திலிருந்து இன்னேர் இடத்திற்கு நடந்து கஷ்டப்பட்டுப் போவதற்கு பதிலாக ஆசிரியர்களே மாணவர்களைத் தேடிப்போகவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டிருக்கிறது. அது நல்லவிதமான எதிர்பார்த்தல்தான். ஒரு குடியிருப்பில் 300 பேர் இருந்தால்தான் ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தலாம் என்று நடைமுறையிருக்கிறது. 300 பேர் இல்லாத இடத்தில் படிக்கக்கூடிய குழந்தைகள் பத்தெட்டுப் பேர் இருந்தால் அவ்வூர் குழந்தைகள் வற்றலாகப் போவதா? அவ்வூருக்குப் படிக்க வசதி செய்து கொடுக்கவேண்டாமா? அந்த இடங்களுக்கு ஆசிரியர்கள் மாணவர்களைத் தேடிச் செல்லவேண்டும். பெரிபேட்டெட்டிக் ஸ்கூல் என்ற முறையில் ஆசிரியர்களே நடமாடும் பள்ளிக்கூடமாக இயங்கிச் செயலாற்ற வேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டிருக்கிறது. 1957-ல் நாம் எதிர்பார்த்து எந்த அளவில் நிறைவேறியிருக்கிறது? நிறைவேறவில்லையென்ருல் ஏன்? என்றெல்லாம் பார்த்து காரணம் கண்டுபிடித்து அதற்குத் தக்கது செய்யவேண்டுமென்று விரும்புவதால் நான் நிபுணர்குழு அமைக்கவேண்டுமென்று நான் கருதுவது.

அதே மாதிரி நம்முடைய மாநிலத்தில் அடிப்படைக்கல்வி—பேசிக் எஜுகேஷன்—ஓரளவு வெற்றியோடு நடைபெற்று வருகிறதா என்பதை ஆராய்வதற்கு தனிமனிதர் ஒருவர் குழுவை அரசாங்கம் நியமித்தது என்றும் அந்தக் குழு தன் அறிக்கையை அரசாங்கத்திற்குக் கொடுத்திருக்கிறது என்றும் அந்த அறிக்கை அரசாங்கத்தின் ஆலோசனையில் இருந்துவருகிறது என்றும் கல்வி அமைச்சர் அவர்கள் நம் முன்னிலையில் தெரிவித்தார்கள். சட்டமன்ற மதிப்பீட்டுக் குழு இதுபற்றி ஆராய்ச்சிசெய்து ஒரு சிபாரிசு செய்திருக்கிறது. அந்த எஸ்டிமேட் கமிட்டி ரிப்போர்ட்டில் இம்மாதிரி காணப்பட்டிருக்கிறது. ஏறத்தாழ 22,000 தொடக்கப் பள்ளிக்கூடங்கள் பழைய பாம்பரை முறைப்படி நடக்கக்கூடிய பள்ளிக்கூடங்களாக இன்னும் இருந்துவருகின்றன. பழையமுறைப் பள்ளிக்கூடம் என்பன பிரிட்டிஷார் விட்டுப்போன முறையில் நடந்துவரும் பள்ளிக்கூடங்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின்படி ஒவ்வொரு ஆண்டுக்கும் நானூறு பள்ளிக்கூடத்திற்கு மேல்

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [1st November 1962

ஆதாரக்கல்விப்பள்ளிக்கூடமாக மாற்ற முடியாது என்று கூறப் பட்டிருக்கிறது. அப்படிப்பார்த்தால் 5 × 400 = 2,000 பள்ளிக்கூடங் களுக்குமேல் பரம்பரை முறைப்பள்ளிக்கூடங்களை நாம் புதிதாக அமைக்கக்கூடிய ஆதாரக்கல்விக்கூடங்களாக மாற்றிவிட முடி யாது. 20,000 பள்ளிக்கூடங்களை ஆதாரக்கல்விப் பள்ளிக்கூடங் களாக ஆக்க வேண்டுமென்றால் எத்தனை ஆண்டுகள் ஆகும் என்று கணக்குப் போட்டுப் பாருங்கள். ஆதாரக் கல்வித்திட்டத்தில் உள்ள நல்ல கூறுகளாக எவை இருக்கின்றனவோ அவற்றை எடுத்துக்கொண்டு பரம்பரைப் பள்ளிக்கூடத்தில் அவற்றை ஏற்றி விட்டால் நல்லதல்லவா என்ற கேள்வி பிறக்கிறது. குடிமைப் பயிற்சி, தொழிற்பயிற்சி இவையெல்லாம் நல்ல கூறுகள், அந்த நல்ல கூறுகளை எடுத்து டிரெடிஷனல் ஸ்கூல் என்று சொல்லக்கூடிய இந்தப் பள்ளிக்கூடங்களில் வகுத்து ஏன் அவற்றைச் செயல் படுத்தக்கூடாது என்று இந்தக் குழு ஆராய்ந்து சொல்லவேண்டு மென்பது என்னுடைய கருத்தாகும்.

அதேமாதிரி இன்னும் பார்க்கப் போனால் நம்முடைய மாநிலத்தில் இரண்டு விதமான திட்டத்தில் 10, 7 ஆண்டு படிப்பு உருவாகி வருகிறது. முதல்நிலை, இடைநிலை ஆகிய பள்ளிக் கூடங்கள் பொறுத்தவரையில் (அவைத் தலைவர் அவர்களுக்கும் தெரியும். யாவருக்கும் தெரிந்த செய்தி. மாநிலத்திலுள்ள கல்வி தொடர்புடைய யாவருக்கும் தெரிந்த செய்தி). எட்டு ஆண்டு படிப்பாக இருந்ததை ஏழு ஆண்டாக ஆக்கி அந்த ஏழு ஆண்டு களில் நன்றாக எவ்வளவு பாடங்களைத் திணிக்க முடியுமோ அவ்வளவையும் திணித்து ஒன்றுமுதல் எட்டு ஸ்டாண்டர்டு என்றிருந்ததை ஏழு ஸ்டாண்டர்டு என்று ஆக்கி திட்டங்களை வகுத்திருக்கிறார்கள். அதற்கு முன்னால் எலிமெண்டரி ஸ்கூலில் ஆண்டுக்கு 200 நாள்தான் வேலை. புதுத்திட்டத்தில் 220 நாட்கள் ஆகின்றன. 20 நாட்களுக்கு 100 மணி உண்டு. ஒரு நாளுக்கு 5 மணி வைத்து 100 மணி எனக்குத்தான் கொடுத்திருக்கிறது என்று போட்டிபோட்டுக்கொண்டு ஒவ்வொரு பாடநூல் ஆசிரியரும் அவரவர்களுடைய பாடப்பகுதியை நிறைய கூட்டிக்கொண்டு போய் விட்டார்கள். சில கணக்கு ஆசிரியர், சமூக நூல் ஆசிரியர் தங்களுக்குத்தான் நேரம் அதிகம் என்று பாடப்பகுதிகளை அதிக மாக்கிவிட்டு வெளியே வந்தபின் பாடம் கூடுதலாக இருக்கிறது என்று மற்றையோர் சொல்கிறார்கள். பாடத்திட்டங்களை உரு வாக்குகிறபோது எந்த ஆசிரியர்கள் உள்ளேயிருந்து கொண்டு அவற்றை வகுத்துக் கூட்டினார்களோ அவர்களேகூட வெளியே வந்து பாடத்திட்டங்கள் நிறைய இருக்கிறது, குறையுங்கள் என்று அரசாங்கத்தைக் கேட்கிறார்கள். இவையெல்லாம் சீர்தூக்கிப் பார்த்து செய்யவேண்டிய செய்தி. 10-ம் வகுப்புப் பாடத்திட்டங்

4-40 p.m. களைப் பளுப்படுத்திச் சுமைப்படுத்திவிட்டமையால் பிள்ளைகள் தவிக்கிறார்கள். அவர்களுக்குத் தரமான படிப்பு, திறமான படிப்பு தரவேண்டுமென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அந்த நிலையில் நான் யாருக்கும் பின்தங்கியவன் அல்லன். ஆனால், அவர்கள் சுமக்க முடியாத அளவுக்கு அவர்களிடம் சுமக்க வைக்க லாமா என்று நாம் கவனிக்கவேண்டும்.

1st November 1962] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

நம்முடைய மாநிலத்தில் எஜுகேஷன் கிராண்ட் கமிட்டி என்று 1956-ல் அமைத்தார்கள். அதன் அறிக்கையிலிருந்து ஒன்றிரண்டு செய்திகள் படித்துக்காட்டுவதற்குத் துணைத்தலைவர் அவர்கள் பொறுக்கவேண்டும். 1958 ஜூன் 24-ல் எஜுகேஷன் கிராண்ட் கமிட்டி என்று ஒன்று திரு. ஆர். எ. கோபால்சாமி அவர்களுடைய தலைமையில் அமைக்கப்பட்டது. அதன்பிறபாடு அதனுடைய செயலாளராக முகம்மது உஸ்மான (டெபுடி டைரக்டர் ஆஃப் பப்ளிக் இன்ஸ்டரக்ஷன்) பணியாற்றினர். இரண்டு ஆண்டுகள் செயலாற்றிய அந்தக் குழு சில சிபாரிசுகளைச் செய்தது. அதில் செயலாளராக இருந்த குலாம் முகம்மது தெரிவித்திருக்கிற செய்தி பொதுமக்களுக்குத் தெரிவிக்கப்பட்ட அறிக்கையாக இருப்பதால் அது கான்ஃபிடென்ஷியல் அறிக்கை அல்ல. அதனால் படிக்கிறேன்.

The Director of Public Instruction is requested to send copies to representatives individuals and organisations interested in the subject so as to reach them before 1st March 1959. The Committee proposes to consider common. . . . . . . . and submit a draft bill and draft statutory Rules.

இம்மாதிரி அந்தக் கல்வித்துறை செயலாளர் குலாம் முகம்மது அறிக்கை விட்டிருக்கிறார்கள். அந்த அறிக்கை **States Grants Commission report** என்று திரு. ஆர். எ. கோபாலசாமி அவர்களால் தயாரிக்கப்பட்டு அனுப்பப்பட்டிருக்கிறது. அவர் எழுதினர்

"The recommendations of the Legislative Committee have been accepted by Government, and their implementation has commenced. This is to continue during the remaining years of the Second Plan Period as well as the Third Plan Period. As an integral part of such a combined programme, it is necessary that the present system of grants for School Education should be suitably revised and the present organisation of management of schools should be improved.

The first list of recommendation is submitted herewith. A second list relating to Elementary Education will be submitted in due course. Meanwhile, the committee has requested the Secretary to prepare a draft Bill and a set of draft statutory Rules with reference to the first list of recomendations. The draft Bill and draft statutory Rules will be finalised thereafter and submitted to the Government for orders". எனவே இந்த அறிக்கைக்கேற்ப இந்தப் பரிந்துரைகளுக்கு ஏற்ப, நம்முடைய மாநிலத்திலே ஒரு கல்வி மசோதா வரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. **Secondary Education Bill** வரும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அந்த மசோதா நாளதுவரையில் உருவாக்கப்படவில்லை என்பது தங்களுக்குத் தெரியாததல்ல. அதைப்பற்றி இந்தக் குழு சிந்தித்து சிபார்சு செய்யவேண்டும். அதன் எல்லாச் சிபார்சுகளையும் இப்பொழுது படிக்கவில்லை. ஒன்று இரண்டை மட்டும் தான் குறிப்பிட விரும்புகிறேன். அந்தப் பரிந்துறையில் மூன்று கூறுகள் சிறப்பான கூறுகள் என்று சொல்லலாம். எவ்வாறு பள்ளிக்கூட நிர்வாகம் உயர்ந்து பள்ளிக்கூட நிர்வாகம், மாவட்டத்தைப்

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [1st November 1962

பொறுத்தவரையில் நடைபெறச் செய்வது, என்பது ஒன்று. எப்படிச் சீர்திருத்தம் செய்வது என்பதைப் பற்றிய யோசனை, அவர்கள் கூறியிருக்கிற யோசனை **Secondary Education Board** அமைக்கப்படவேண்டும் என்பது. ஒவ்வொரு மாவட்டத்திலும் உயர்தரக் கல்வி போர்டு அமைக்கவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். இதைப்பற்றி இரண்டு விதமான கருத்து கிடையாது. எல்லோரும் ஒரு மனதாக சிபார்சு செய்திருக்கிறார்கள். நம்முடைய அரசாங்கம் 1956-57-ல் ஒரு குழு அமைத்துவிட்டு, அவர்கள் செய்த சிபார்சை ஒத்துக்கொள்வதில் தயங்குவதேன் என்று இப்பொழுது அமைக்கப்பட இருக்கும் நிபுணர்கள் குழு பார்த்துச் சொல்லவேண்டும். ஆனால் இரண்டு விதமான அபிப்பிராயம் என் தெரிவித்தார்கள் என்றால் **Secondary Education Board** வேண்டும் என்பதை ஒருமனதாக ஒத்துக் கொண்டாலும் அது எவ்வாறு அமைக்கப்பட வேண்டும் என்பதில் கருத்து வேறுபாடு இருக்கிறது என்று தெரிவித்தார்கள். இரண்டு கருத்து இருந்தது. ஒன்று என்ன வென்றால், அந்த **Secondary Education Board** என்பதற்குத் தலைவராக **District Education Officer** இருக்கவேண்டும் என்பது. இன்னொரு கருத்து, அந்த மாவட்டக் கல்வி அதிகாரி தலைவராக இருக்கக்கூடாது, ஒரு **Non-official member** உத்தியோகத்துறை அற்றவர் இருக்க வேண்டும் என்பது. இந்த இரண்டும் இல்லாமல் இப்பொழுது வேறுவிதத்தில் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. இது சரிதானா என்று ஆராய்ந்து சொல்லுவதற்கு இந்தக் குழு தேவை என நான் கருதுகிறேன்.

அப்புறம் பள்ளிக்கூடங்களுக்குக் கொடுக்கும்படியான மான்யங்கள் எல்லாம் வரையறை செய்யப்பட்டு இந்த மாதிரி கொடுக்க வேண்டும் என்று விதிகளை அந்தக் குழு சிபார்சு செய்திருக்கிறது; **Grants-in-aid Code** எப்படி மாற்றப்படவேண்டும் என்று சிபார்சு செய்திருக்கிறது. நமக்கு இப்பொழுது உள்ள **Madras Educational Rules**-க்கு எத்தனை ஆயிரம் திருத்தம் வந்திருக்கிறது என்று தெரியாது. இந்தத் திருத்தம் எல்லாம் ஒரு டிபுடி இன்ஸ்பெக்டர் கையில் இல்லை என்றால், அந்த ஆசிரியர் பாடு இப்படி இருக்கும் நேரத்தில், இதைச் சட்டஞ்செய்து ஒழுங்காக மாற்றவும் இல்லை, புதிதாக அச்சிடவும் இல்லை. டிபுடி இன்ஸ்பெக்டர் டெஸ்டுக்குப் போகிறவர்களுக்கு எதை வைத்து எழுதுவது என்று புரியவில்லை. இப்படி இடர்ப்பட்ட நிலை எல்லாம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. ஆகையினால், நான் மேலே சொன்ன காரணங்களால், கல்வி நிபுணர்கள் அடங்கிய குழு தேவை என்று சொன்னது நன்றாய்ப் புரிந்திருக்கும். இதற்கு மேல் நான் அதிகம் எடுத்துச் சொல்ல விரும்பவில்லை; இதனோடு முடித்துக் கொள்ளுகிறேன்.

SRI T. P. SRINIVASAVARADAN: Mr. Deputy Chairman, in seconding the Resolution for the appointment of a committee to review the whole position of elementary and secondary education. I should like to point out to the Hon. the Minister for Education that recently I received a questionnaire from the Standing

1st November 1962] [**Sri T. P. Srinivasavaradan**]

Committee on Primary Education appointed by the Union Minister for Education. Shri Dhebar is the Chairman of that Standing Committee for Primary Education. The Standing Committee was constituted by the Union Minister for Education and not by the Central Advisory Board of Education. I have got a copy of the questionnaire here. The terms of reference are :

'Assessment of the present position of primary education in all its aspects, evaluation and assessment of the extent to which the previous recommendations have been implemented and the problems arising therefrom, formulation of aims and objects of primary education in relation to changing conditions and institutions, formulating the plans for future development and indicating priorities for each ; estimating the cost of the programmes that you suggest.'

I should like to point out that unfortunately, in our State there are no Standing Committees for primary education and secondary education. My Friend, Dr. A. Chidambaranathan, wants only one committee for both primary and secondary education. I would suggest that there should be two committees. They are only advisory. They are not statutory committees.

Dr. A. Chidambaranathan : Sir, on a point of personal explanaion. I may even say at this very stage that the committee that I am contemplating is a bigger committee from which persons may be co-opted for considering matters pertaining to elementary education and certain other persons co-opted for considering secondary education.

Sri T. P. Srinivasavaradan : I agree. There must be, in my opinion, whether they are sub-committees two separate committees, one devoting increased attention to primary education and the other devoting its attention to secondary education. But these two at a later stage should be dovetailed. They cannot be considered in isolation. Apart from that, the reason why we should immediately have a committee is this. I may point out to the Minister for Education that already there exists shortage of teachers. Now, during the war period that shortage will be more and more keen. So, if there is a committee, it will suggest measures as to how to meet this shortage. There ought to be two interim measures short-term measures and also long-term measures. Of course, the Mover of this Resolution has pointed out that the Government's aim seems to be more enrolment in the primary stage and to devote their attention to improve the quality in the secondary education stage and he has pointed out how incompatible these two are. It is a thing to be noted. Not only we must have the physical targets attained as a matter of fact, we have attained the target much earlier than the Plan envisaged but also see that the quality of education at the primary stage improves. If it is neglected at that stage, any amount of money spent or any amount of time spent at the secondary educa-

[Sri T. P. Srinivasavaradan] [1st November 1962

tion stage will not bear adequate fruit. So, it is very important that the quality of education in the primary stage must be improved. Government have recognised, I am glad to say, that the Hon. Minister is of the same view as we teachers are, that the primary classes should be handled by only trained S.S.L.C.'s and not by higher grade teachers. He has openly expressed it. Of course, there are difficulties. We cannot terminate the services of nearly forty to fifty thousand teachers who are only higher grade trained teachers. It is only by giving them refresher courses or some suitable training that we can improve the quality to some extent. But I should like to place one thing before the Hon. Minister for his earnest consideration. Even now in many places we find the teacher-pupil ratio is only 40 or 45. Of course, Government have put it as 1 :40. The actual practice is 1 :35. It does not matter. But you find shortage of teachers . On account of the war many young men will be recruited to the war and there will be shortage. In England what happened during the war was this. In elementary schools one teacher had to handle fifty and sixty children during the war time. My fear is such a thing may come about in our State also and we must be prepared for it. That is much more important. We must win the war. Many young men will certainly join the war and there will be shortage of teachers. So, the interim measure is how best at least to maintain the present quality. The teacher-pupil ratio won't work. 1 :40 will not work. It is only 1 :50 in certain schools. I would earnestly plead with the Government that they stop at least for some years the opening of more elementary schools if possible. If teachers are available, then it is all right. If teachers are not available, it is very difficult. So also in the case of secondary schools, my hon. Friend Dr. Chidambaranathan has pointed out what has happened to the Secondary Education Bill. I was a member of the Secondary Education Grants Committee. We drafted the Bill. It was placed before the Advisory Board of Education and also approved. We understand that it is with the Cabinet at the present stage. Of course, about the constitution of high school boards there were two opinions. One was that the District Educational Officer should be the Chairman. As the hon. Member has himself pointed out, the other view was that a non-official should be the Chairman. Now the latest proposal before the Department of Education is that the whole thing should be entrusted to a separate District Educational Officer so far as the Board Schools are concerned and he will be under the Collector. But the real difficulty there is that he is answerable to the Director of Public Instruction and he is also answerable to the Collector. I do not know for which he is responsible to the Collector and for which part of administration he is answerable to the District Educational Officer. There will always be a clash if he is answerable to both and there would not be smooth working. The Hon. Minister has said that the immediate superior to the District Educational Officer-in-charge of district board schools is the Collector and this question also should be considered carefully. So, as I have pointed out, I do not think the Secondary

1st November 1962] [Sri T. P. Srinivasavaradan]

Education Bill will be placed before us. Now, when we are all concentrating on this, I also feel that while this war is on, it will not be possible for us to consider calmly and also seriously these questions.

(Mr. Chairman in the Chair.)

But a committee must be appointed as pointed out by the Mover of this Resolution to see that the quality of education in at least the secondary and primary schools does not go down. That is very important. During the period of the war some measures ought to be taken to see that the quality is maintained and that the shortage of teachers is overcome.

Thank you, Mr. Chairman.

Mr. CHAIRMAN: The hon. Member Sri G. Krishnamoorthy. A short speech please. 5-00 p.m.

* Sri G. KRISHNAMOORTHY: Mr. Chairman, Sir, in wholeheartedly supporting this Resolution, I would also stress the need for the appointment of a committee to go into the present educational system. The tendency in our educational circles has all along been to criticies the load of the syllabus, the number of years of the course, and so on. But, Sir, I have been pointing out often on the sacred floor of this House that the content of education should be the main thing that ought to attract the attention of the committee, perhaps the sole attention of the Committee that is to be formed as per the Resolution given notice of by the hon. Member. I put these matters for consideration by the Hon. Minister in charge of Education. Is it necessary for an ordinary student of the first form or the second form to read history book where the life of a king is described like this; 'He kills his father in such and such a way and then gets himself enthroned'. Is this necessary, especially in this period when we have got Independence? Is it necessary to have anti-social sums like the mixture of superior and inferior coffee seeds, mixture of milk and water, and so on? What then can we expect in society except adulterated foodstuffs and so on? Can any amount of legislation put things right if these bad ideas are instilled in the minds of our young students by the institutions approved by the Government, by teachers for whom grants are paid by the Government, and through books approved by the text-book committees which are appointed by the Government? Should we not see that these anti-social ideas are not put in there? Should we not see that at least for the first few standards there need not be any text-books? Regard for the teacher has gone because even the lowest standard boy thinks like a graduate student, (Interruption) that with the aid of the text-book he can prepare for the examination by burning midnight oil without the aid of the teacher. We can put in as one of the terms of reference to the committee that has been proposed by the Resolution, to examine the need for text-books for the lower classes, at least for the first three classes.

[Sri G. Krishnamoorthy] [1st November 1962

Then, Sir, any educational system should have its aim. We are running on, I am sorry to say, without any aim. We are still having the education that we were having in the pre-independence days. What is our aim? Our aim is to make the citizen lead a simple life. Character building is the only aim of education and nobody can take exception to it. That being so, I would ask, is there any lesson in any of the subjects taught from the infant standard to the B.A. standard where character building is aimed at? No. Not to speak of want of religious education I ask, is there anything in the history, mathematics or science or any other subject taught to our boys, to give moral instruction to our boys and build up their character? Is there anything to describe the powers of Nature and the littleness of Man; the greatness of God and the phylosophic background that we were having all these days; the attachment to truth for which the Father of the Nation lived and died; is there any book saying that Truth is God and God is Truth? Nothing whatsoever, and still we call it education. Is there any book to show that we should be charitable-minded enough. There cannot be anything but chaos in society if people are not charitable-minded enough. Of course, occasions come when we show our charity, because that instinct is there and because we are sons of Tamil Nad, we are sons of India. But that is not enough. That spirit should manifest itself throughout during ordinary days, during peace and during war and not only during an emergency. That is the purpose of education. And if we take that as the model for a citizen, and the Committee proposed proceeds to frame the syllabus with the idea of producing such citizens, naturally the content of education will be far, far away from the kind of education that it is now. Then we will have ideal citizens and that is the purpose for which I support the Resolution and plead for the constitution of the Committee.

Thank you, Mr. Chairman.

* **கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தைப் பற்றி அதாவது ஒரு குழு அமைத்து அந்தக் குழு கல்விப் பிரச்னைகளைப் பற்றி யோசனைகள் செய்ய வேண்டுமென்பதும், இருக்கிற குறைகளைப் பரிசீலனை செய்ய வேண்டும் என்பதும் தீர்மானம். இதுவரையில் எத்தனையோ குழுக்கள் அமைக்கப்பட்டன. பல பிரச்னைகளைப் பரிசிலனை செய்திருக்கின்றன. என்னுடைய கவலை எல்லாம், இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பிறகு, நீண்ட காலமாக தொடக்கப்பள்ளி வகையிலும், உயர்நிலைப் பள்ளிப் படிப்பு வகையிலும், மேல் படிப்பு வகையிலும் ஒரு முடிவு இல்லாமல் பரீட்சைகளே நடந்து கொண்டு போகிறதே, எத்தனை காலம் பரீட்சை? பிள்ளைகளுக்கு, நிரந்தரமாகத் தெரியவேண்டாமா என்பதுதான். என்ன படிக்கப் போகிறோம் என்பது தெரியவேண்டாமா? கடைசியாகப் பேசிய கனம் அங்கத்தினர் திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் உயர்ந்த கொள்கைகளைச் சொன்னார். கொள்கை எல்லாம் எல்லோருக்கும்

1st November 1962] [திரு. எம். பக்தவத்சலம்]

தெரிகிறது. எத்தனை நாளைக்குச் சொல்லிக் கொண்டே போவது? அறிவும் வேண்டியதுதான், ஒழுக்கமும் வேண்டியதுதான். அறிவு முக்கியமானது. அறிவு இல்லாமல் வாழ்க்கை இல்லை. அந்த அறிவு எவ்வளவு அறிவு என்று யாரும் சொல்ல முடியாது. 'கற்றது கை மண் அளவு, கல்லாதது உலகளவு' என்று கூறப்பட்டிருக்கிறது. இன்றைக்கு குழந்தைகளுக்கும் பெற்றோர்களுக்கும் விழிப்பு வந்திருக்கிறது. கனம் அங்கத்தினர் திரு. சீனிவாசவரதன் சொன்னார். அவர் ஆற்றல் உள்ள அனுபவம் உள்ள ஆசிரியர். ஒன்று மட்டும் நான் விரும்புகிறேன். பள்ளிக்கூடம் இல்லை என்றால், மாணவர்கள் படிக்க முடியாமல் இருக்கிறது. நீங்கள் வேண்டாம், மற்றவர்கள் படித்தால் போதும் என்று சொன்னால், யார் ஏற்றுக் கொள்ளுவார்கள். இந்த ஜனநாயகத்தில் முன்பு எல்லாம் கட்டாயம் படித்தாக வேண்டுமெனச் சொல்ல வேண்டியிருந்தது, அதற்குச் சட்டம் செய்தோம். இப்பொழுது சட்டத்திற்குக் கட்டாயம் இல்லை. இந்த அற்புதமான விழிப்பு எல்லா கிராமங்களிலும் இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. பெற்றோர்கள் எல்லாம் நம் குழந்தைகள் படிக்கவேண்டும், கையெழுத்துப் போட்டால் போதும் என்று இல்லை. பத்திரிகை படித்தால் போதும் என்று இல்லை, உயர்ந்த படிப்பு வேண்டும் என்று விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. ஐந்து மைலுக்கு இல்லை, மூன்று மைலுக்கு இல்லை, இரண்டு மைல், ஒரு மைலுக்குக் கூட உயர்நிலைப் பள்ளி வேண்டும் என்று கேட்பது மட்டுமல்ல, நாங்கள் பணம் கொடுக்கிறோம், டெபாசிட் செய்கின்றோம், நாங்கள் சென்ற ஆண்டு டெபாசிட் செய்துவிட்டோம், நாங்கள் கேட்பதை எல்லாம் கொடுக்கிறோம், நாங்கள் கட்டிடம் கட்டிக் கொள்ளுகிறோம் என்று சொல்லக்கூடிய அளவுக்கு விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. இது வரையில் எத்தனையோ பரிசீலனை நடந்தது. இன்னொரு குழு போட்டு இந்த ஆண்டுக்கும் இல்லாமல், மேலும் நிரந்தரம் இல்லாத நிலைமையைக் கல்வித் துறையில் கொண்டு போடக்கூடாது என்பதுதான் என்னுடைய கவலை. இந்த ஆண்டில் சம்பந்தப்பட்ட நிபுணர்கள், மற்றவர்கள், பொதுமக்கள் மற்ற பிரதிநிதிகள் எல்லோரும் கூடிக் கலந்து ஆலோசனை செய்து நிரந்தரமான கல்வித் திட்டம், தொடக்கப் பள்ளிகளிலும் சரி, உயர்நிலைப் பள்ளிகளிலும் சரி, கல்லூரிப் படிப்பிலும் சரி, நிரந்தரமான திட்டம் உருவாக்கி நிறைவேற்றவேண்டும். மேலும் மேலும் முடிவு அற்ற நிலைமை என்றால், அது மக்கள் இன்றைக்கு அறிவு வளர்ச்சிக்கு ஆவலுடன் இருப்பதற்கு, தடையாகத்தான் இருக்கும். ஆகவே கூடியவரையில் ஒரு திட்டம் உருவாக்கி எல்லோரையும் கலந்து ஆலோசனை செய்து நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும். கனம் அங்கத்தினர் குறிப்பிட்ட குழுக்கள் எல்லாம் சிபார்சு செய்திருக்கிறார்கள் இதெல்லாம் நம் முன்னால் இருக்கின்றன. மேலும் மேலும் குழுக்கள் அமைத்துக் கொண்டே போனால், இந்த ஆண்டு இறுதிக்குள் முடிவு செய்து வருகிற ஆண்டு நடைமுறைக்குக் கொண்டு வரமுடியாமல் போய் விடும். இதுதான் என்னுடைய கவலை. அந்த வகையில்தான் நான் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறேன். முக்கியமாக நான்

5-0 p.m.

[திரு. எம். பக்தவத்சலம்] [1st November 1962

மாவட்டம், மாவட்டமாகப் போய் அங்கே இருக்கிற தலைமை ஆசிரியர்களோடு எல்லாம் கலந்து ஆலோசனை செய்துகொண்டு வருகிறேன். மத்திய செகண்டரி போர்டு ஆப் எஜுகேஷன் இருக்கிறது. கனம் அங்கத்தினர் திரு. சீனுவாசவரதன் சொன்னது போல், மத்திய அரசாங்கம் மூன்று கமிட்டிகள் அமைத்திருக்கிறது. ஒன்று உயர்நிலைப் பள்ளிக்காக, ஒன்று தொடக்கப் பள்ளிக்காக, ஒன்று, கல்லூரிக்காக, மூன்று குழுக்கள் அமைந்திருக்கிறார்கள். அவர்கள் பரிசீலனை செய்து வருகிறார்கள். அவர்களுக்குச் சொல்லியிருக்கிறேன். இந்த ஆண்டு இறுதிக்குள் முடிவு வரவில்லை என்றால் சிபார்சுகளைப் பின்னால் ஏற்று நடத்த இயலாது என்று சொல்லியிருக்கிறேன். இது எல்லாம் இருக்கிற போது மீண்டும் ஒரு குழு அவசியமா என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். ஆதாரக் கல்விபற்றி குறிப்பிடப்பட்டது. ஆதாரக் கல்வி பற்றி ஒரு நிபுணர் பரிசீலனை செய்து ஒரு அறிக்கை அளித்திருக்கிறார்கள். அதோடுகூட மத்திய அரசாங்கம் ஒரு கமிட்டி போட்டிருக்கிறார்கள். ஆரம்பக் கல்விக்குப் போட்ட கமிட்டி ஆதாரக் கல்வித் திட்டம் பற்றியும் சிபார்சு செய்வார்கள். ஆதாரக் கல்வியைப் பொறுத்த வரையில் பழைய அடிப்படையை வைத்துக்கொண்டே முடிவுசெய்வது நல்லதல்ல. இன்றைக்கு எத்தகைய விழிப்பு மக்களிடம் இருக்கிறது என்று கண்டு, இந்த ஆதாரக் கல்வித் திட்டம் எப்படி மாற்றப்படவேண்டும் என்பதில் கவனம் செலுத்தவேண்டும். அதை அப்படியே வைத்துக் கொள்ளுவது இல்லை. அதை அதிகமாக **adapt** பண்ண வேண்டியதாக இருக்கிறது. இன்றைய தேவைக்கு ஏற்றபடி, மக்களுடைய மனோபாவத்திற்கு ஏற்றபடி மாற்றிக் கொள்ளுகிறோம். அவ்வாறு மாற்றவேண்டியதாக இருக்கிறது.. மத்திய அரசாங்கம் அமைத்திருக்கிற கமிட்டி திரு. தேபர் அவர்களைத் தலைவராகக் கொண்ட கமிட்டி. என்னைக்கூட அழைத்திருக்கிறார்கள். அந்தக் கமிட்டியில் வந்து அபிப்பிராயம் சொல்லவேண்டும் என்று தெரிவித்திருக்கிறார்கள். இந்த மூன்று கமிட்டிகளுடைய அபிப்பிராயம் சீக்கிரத்தில் வரும். வந்த பிறகு நாம் **Basic Education** -ஐ எந்த வகையில் திருத்தி அமைப்பது என்று கவனம் செலுத்த வேண்டும். இப்பொழுது Secondary Education Board-ஐப் பற்றிச் சொன்னார்கள். இதுவரையில் ஜில்லா போர்டு பள்ளிக் கூடங்களாக இருந்தன உயர்நிலைப் பள்ளிகள். மற்ற பள்ளிகள் அரசாங்க பள்ளிகளாகச் சில, தனியார் நடத்தும் பள்ளிகளாகச் சில இருந்தன. ஜில்லா போர்டுகள் கலைக்கப்பட்ட பிறகு கலெக்டர்கள் மேற்பார்வை எடுத்துக்கொண்டார்கள். கலெக்டர்கள் பார்க்கிறது என்றால் முடியவில்லை. கலெக்டர்களுக்குப் பதிலாக ஜில்லா கல்வி அதிகாரி ஒருவரை **Senior** கல்வி அதிகாரி ஒருவரைப் போட்டிருக்கிறது. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒன்று அல்லது இரண்டு **Development Council** இருக்கிறது. அதிலே **Planning Committee** இருக்கிறது. அதிலே கல்விக்கு ஒரு **Planning Committee** இருக்கிறது. இரண்டு **Planning Committee** இருக்கிற ஜில்லாவிலே, இரண்டும் சேர்ந்து செய்கிறது. **Education Officer** வருகிறார். எல்லாம் நடைபெற்று வருகிறது.

1st November 1962] *[திரு. எம். பக்தவத்சலம்]*

கலெக்டர் பார்ப்பது போதவில்லை. அதையே ஒரு கல்வி அதிகாரி பார்த்து வருகிறார். எதற்கு இன்னொரு கமிட்டி அமைக்கவேண்டும். **Standing Committee on Education** இருக்கிற ஜில்லாவிலே அவர்கள் முழு ஆலோசனை செய்வார்கள் என்பதால்தான் இந்த யோசனை.

இன்னும் இப்பொழுது பதினொன்று ஆண்டுகள், பத்து ஆண்டு கள் என்பதுபற்றிக் குறிப்பிட்டார்கள். நான் பார்த்ததில் ஆசிரியர் களுடைய ஏகோபித்த அபிப்பிராயம் இப்பொழுது **condense** பண்ண வேண்டியதில்லை, பண்ணியது நல்லது இல்லை என்று தான் சொல்லுகிறார்கள். இருநூறு நாளா, இருநூற்று இருபது நாளா என்று கணக்குப் போடுவது என்றால், கணக்கு ஒரு விஞ்ஞானம். ஒரு ஆற்றைக் கடக்கிறவன் போடும் சராசரிக் கணக்கு வேறு. அதுவும் விஞ்ஞானம் தான், **Average** என்பது. நாள் கணக்குப் போட்டுக்கொண்டு இருப்பதில் பயன் இல்லை. பதினொன்று ஆண்டுகள் இருக்கவேண்டும் என்று எல்லோரும் அபிப்பிராயம் சொல்லுகிறார்கள். சென்ற ஆண்டில்தான் 10 ஆச்சு. நிமிஷமென்று மாற்றுவதில் இருக்கிற கோளாறுக்கு இடம் இல்லாமல் செய்யவேண்டும் என்றால், இந்த ஆண்டிலேதான் செய்யவேண்டும். இப்பொழுது இன்னொரு குழு போட்டு பரி சீலனை செய்து கொண்டேபோனால் அதிகமான சிக்கலுக்குத்தான் இடம் ஏற்படும். இப்பொழுது மத்திய அரசாங்கம் மூன்று கமிட்டி கள் போட்டிருக்கிறது. அந்த மூன்று கமிட்டிகளுடைய சிபார்சு களையும் பார்ப்போம். இந்த ஆண்டில் ஒரு கல்வித் திட்டத்தை உருவாக்குவோம். எந்த அளவுக்கு மாறுதல் வேண்டும் என்று தெரிகிறதோ அவ்வளவு செய்யலாம். தொடர்ந்து கல்வி அனுபவம் உள்ளவர்கள் பார்த்து, எந்தப் பள்ளியாக இருந்தாலும் எவ்வாறு மாற்றி அமைப்பது என்பதுபற்றி நிதானமாகப் பார்த்துச் சொல்லுவார்கள். அவர்கள் சொல்லுகிற யோசனையை எடுத்துக் கொள்ளலாம்.

இப்போது இந்த ஆண்டிலேயே எவ்வளவு தூரம் முடியுமோ அந்த அளவில் மாறுதல் செய்யவேண்டும். எல்லோரும் ஒப்புக் கொள்கிற அளவில் செய்யவேண்டும். சட்டசபை ஆலோசனைக் குழு இருக்கிறது. சட்டமன்றத்தில் இந்த ஆண்டு இறுதிக் குள்ளேயே கல்வித் திட்டத்தை நிர்ணயப்படுத்தி அபிப்பிராயம் சொல்வதற்கு இடமளிக்கவேண்டுமென்று நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகையால் இந்த நிலையில் கனம் அங்கத் தினர் அவர்கள் பிரேரேபித்துக் கூறுகிறபடி குழு இப்போது அமைக்க வேண்டியதில்லை. குழு அமைத்தால் இன்னும் வளர்ந்து கொண்டு போவதாகத்தான் இருக்கும். ஆகையால் இந்த ஆண்டுக் குள் இந்த மன்றத்தில் கலந்து ஆலோசித்து நாம் ஒரு முடிவு செய்வோம். கூடுமானவரையில் நிரந்தரமான முடிவாகச் செய்வோம். அதோடு நின்று விடப்போவதில்லை. மத்திய அரசாங்கம் அமைத்திருக்கிற குழுவின் சிபாரிசும் அபிப்பிரா யமும் நமக்குத் தெரியும். அதற்கு மேல் என்ன செய்யலாம் என்று யோசிக்கலாம். தீர்மானத்தில் குறிப்பிட்டு அங்கத்தினர்

*[திரு. எம். பக்தவத்சலம்]* [1st November 1962

அவர்கள் ஒரு ஊரில் ஐந்து பேர் படிப்பதற்கு இருந்தால் அங்கு என்ன செய்வது என்றார்கள். முந்நூறு ஜனத்தொகை இருந்தால் அங்கு ஆசிரியர் போட்டு செய்யவேண்டியதுதான். எல்லோருக்கும் உரிமை இருக்கிறது. அரசியல் அமைப்புச் சட்டத்தில் படிக்கவேண்டுமென்ற உரிமை இருக்கிறது. அது எல்லாம் பின்னால் பார்த்துக்கொள்ளவேண்டியது. ஆகையால் குழு இப்போது அமைக்கவேண்டாம் என்று தெரிவித்துக்கொண்டு இந்த தீர்மானத்தை வற்புறுத்த வேண்டாமென்று கேட்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

**டாக்டர் அ. சிதம்பரநாதன் :** தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்ததன் நோக்கமே நிரந்தரமான கல்வித் திட்டம் வகுக்கப்படவேண்டும், அடிக்கடி மாறுதல் வேண்டாமென்பதுதான். அமைச்சர் அவர்கள் நன்றாக ஆலோசித்து நிரந்தரமாக இருக்கக்கூடிய ஒரு திட்டத்தை உருவாக்குகிறோம் என்று உறுதி அளித்ததால் நான் இதை வற்புறுத்த விரும்பவில்லை.

The Resolution was, by leave, withdrawn.

MR. CHAIRMAN : The House will now adjourn and meet again at 3 p.m. tomorrow.

The House then adjourned.

## VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

* 298. *Statement XXXII showing action taken on assurances, promises and undertakings given during Thirteenth to Fifteenth and Eighteenth to Twentieth Sessions, 1958–62 of the Madras Legislative Council.*

† 299. *Report containing the activities of the Civil Supplies Department for the half-year ended with 30th September 1960.*

† 300. *Notification issued with G.O. No. 3155, Home, dated 13th September 1962 regarding rates of tax leviable with effect from 1st July 1962.*

† 301. *Notification issued with G.O. No. 3166, Home, dated 14th September 1962 regarding amendment of notifications issued under the Madras Motor Vehicles Taxation Act, 1931.*

† 302. *Notification issued with G.O. Ms. No. 34, Legislative Assembly, dated 2nd July 1962 regarding amendment to the Madras Legislature Travelling Allowance Rules, 1955.*